# நாயனாரென்னும் சொல்லாராய்ச்சி

## நாயனா ரென்பது சிவபெருமானுக்கு ஒரு பெயராகின்றது.

நாயன் - நாயனார், நாயன் = சிவன்.

நாய னென்னும் சொல்லுக்கும் சிவனென்னும் பொருளுக்கும் சம்பந்தம் எப்படி! ஆராய்தல் வேண்டும்.

(1) நா என்பது முதல் நாக்கினையும் அந்நாக்கு வாயின் நடுவிலிருத்தலால் பிறகு நடுவினையும் உணர்த்தி நிற்கும்.

நா: -

1 - நாக்கு - இனிதிசைப்ப தென்பது,

2 - நடு.

நா என்பதற்கும் ஒர்முதற்சொல் உள்ளது.

சில சொற்களின் ஈற்றில் யகரமெய் வருவது இயல்பாகலின், நா என்பது நாய் என்றாகி முதல், நடுவினையும், ஊர் நடுவுள் திரிதலால் பிறகு சுணங்கனையும் உணர்த்தி நிற்கும்.

நா - நாய்: -

1 - நடு

2 - சுணங்கன் ஊர் நடுவுள் திரிவது.

“நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட்பட்டோர்க்கு"
என்பதனால் தெளிந்து கொள்க. (சு - தே)

நாய்மீன் - நெய்மீன் = சித்திரை, நடுநாளென்பது.

(2) - **நாய் = நடு.**

நாயில்: -

1 - கோட்டை. - நகர் நடுவுளிருப்பது, மலைநடுவி லிருப்பதுமாம்

2 - மதில் - கோட்டைமதி லென்பது

ஞாயில்: -

1 - கோட்டை

2 - மதில் - காய

3 - ஏவறை - அரணடுவிலுள்ளது.

4 - முடக்கறை - ஏவறைபோல்வது.

5 - முடக்கு (பூ - மாலை)

ஏவறை, பகைவர் அறியாதபடி அரணடுவில் வளைந்து வளைந்து செல்லும் வாயிலுடையது.

நாயில் - ஞாயில்.

(3) - **நாயில்**

நாயிறு = சூரியன். கோள்களினடுவிலுள்ள தென்பது.

து - பெயர் விகுதி.

நாயிறு - ஞாயிறு = சூரியன்.

ஞாயிறென்னும் சொல், சூரியமத்திய சித்தாந்த முண்டான காலத்தில் உண்டாயதெனக் கொள்ளல் வேண்டும்.

(4) - **நாய் = நடு.**

நாயன் = சிவன். நடுவிலுள்ளவன், நடுவில் விளங்குவோன், நடுவில் நிற்றலால் விளங்குவோன் முதலிய பலபொருள்படும்.

நாயன் அரசனுமாம். நடுநிலையுள்ளா னென்பது.

நாயன். - நாயனார்.
"வாயினாலிப்போதே மன்றில் நடமாடும்
நாயனா ரென்றுரைப்போம் (நாம் "
(கோயில் நான்மணிமாலை)
"தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறிகில்லார்'
(திருமந்திரம்)

என்றதனால் சிவனது நடுநிலைமை யிலக்கணம் போதருகின்றது. மற்றும் அடியில் வருவனவற்றால் தெளிந்து கொள்க.

"ஆரண நான்கிற்கும் அப்பாலவனறியத் துணிந்த
நாரண னான்முகனுக் கரியான் நடுவாய் நிறைந்த.
பூரண னெந்தை புகலிப்பிரான் பொழிலத் தனைக்கும்
காரணனந்தக் காணங்கடந்த கருப்பொருளே "
(திருக்கழுமல மும்மணிக் கோவை)

"ஏவலத்தால் விசயற்கருள் செய்தே இராவணனை யீடழித்து
மூவரிலும் முதலாய் நவோய மூர்த்தியை அன்றிமொழியான்"
(ச - நே முயலகன் தீர்த்தது)

"சாட்டத்திலங்கி கடையவந்தா லென்ன உன்னும்
நாட்டத்தினூடுவந்த நட்பே பாபரமே "

"முத்தாந்தவீதி முளரிதொழும் அன்பருக்குச்
சித்தாந்தவீதி வரும் தேவே பராபரமே"

சித்தாந்தவீதி = புருவாடு,

"நெற்றிக்கு நேரே நிறைந்த ஒளிகாணின்
முத்திக்கு மூல மது " (ஔவைகுறள்)
"நாட்டத்தைப்பற்றி நடுவணைச் சேர்வோர்க்கு
வாட்டங்க ளே துக்கேடி குதம்பாய்
வாட்டங்களே துக்கேடி " (குதம்பை சித்தர் பாடல்)

"நாபி, இதயம், கண்டம், மூர்த்தம் இந்நான் கிடனும் சிவம் விளங்கா நின்ற திருக்கோயிலாகும்"

நாபி - அரைக்கும் வயிற்றுக்கும் நடு.
இதயம் - வயிற்றுக்கும் கண்டத்துக்கும் நடு.
கண்டம் - இதயத்துக்கும் முகத்துக்கும் நடு.
மூர்த்தம் - புருவநடு.

*நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி
உற்றுற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம் -
பற்றுக்குப் பற்றாய்ப் பரமனிருந்திடம்
சிற்றம்பல மென்று சேர்ந்து கொண்டேனே"
(திருமந்திரம்)
"உடையான் உன்றனடுவிருக்கும் உடையான் நடுவுணீயிருத்தி
அடியே னடுவுளிருவீரும் இருப்பதானால் அடியேனுன்
அடியார் நடுவுளிருக்கும் அருளைப்புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும்வண்ணம் முன்னின்றே "
(திருவாசகம்)

நாயன் = சிவன்.
1 - நடுநிலை யாளன்
2 - புருவநடுவில் ஒளிர்வோன்
3 - நாபி முதலியவற்றில் ஒளிர்வோன்
4 - உடையாளை நடுவிலுடையோன்
5 - உடையாள் நடு விருப்பவன்
6 - அடியார் நடு விருப்பவன்
7 - சூரியனடு விருப்பவன்
8 - வேதத்தினடுவி லொளிர்வோன்.

இன்னும் கூறலாம்.

**(5) - நாய் = நடு**

நாயம் = நீதி. நடு நின்று தீர்ப்பது.
நாயம் - ஞாயம் = நீF
நாயம் - நாயநம் = தலைமை நடுவிலிருப்பது.
நாயகமணி = நடுமணி.
நாயன் - - நாயர் - ஞாயர் = தந்தை.
நாயகன் = தலைவன்.

இனி நாய்கர், நாயனா, நயினார், நாயுடு முதலியனவும் அவற்றின் திரிபுகளையும். பழந்தமிழுள் நடுநிலையின் ஆராய்ச்சியால் மற்றும் தெளிவுண்டாகற்பாலது.

சொற்களில் ஏதேனும் ஐயம் உளதாயின் மொழிநூல் பார்க்க வேண்டும்.

இங்ஙனம்,
மாகறல், கார்த்திகேய முதலியார்,
கண்டி, சென்னை.

சித்தாந்தம் - 1914 ஹூ - டிசம்பர் மீ